


# THE MADRAS LEGISLATIVE ASSEMBLY

**Tuesday, the 30th September 1958.**

The House met in the Assembly Chamber, Fort St. George, at nine of the clock, Mr. Speaker (THE HON. DR. U. KRISHNA RAU) in the Chair.

I.—QUESTIONS AND ANSWERS.

## STARRED QUESTIONS.

*Cauvery-Mettur Project Canal.*

* 30 *S. N. Q.*—SRI P. U. SHANMUGAM (on behalf of Sri **K. Anbazhagan**) : கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா —

(அ) தஞ்சை மாவட்டம், பேராவூரணியை அடுத்த செல்லத்தூர் வெட்டிக்காடு என்னுமிடத்தில் சி.எம்.பி. பெரிய கால்வாயில் ஏற்பட்ட உடைப்பை அடைக்க எவ்வளவு நாட்கள் கழிந்தன ? அவ்வளவு நாட்கள் கழியக் காரணமென்ன ?

(ஆ) அதே இடத்தில் அல்லது அதற்குப் பக்கத்தில் கடந்த ஜூலை மாதத்தில் உடைப்பு ஏற்பட்டது உண்மையா ?

(இ) இந்தக் கால்வாயில் ஆண்டு தோறும், தண்ணீர் வருகின்ற பருவத்தில், உடைப்பு ஏற்படுவதும் உழவர் குடி மக்கள் பெரிதும் பாதிக்கப்படுவதும் அரசாங்கத்திற்குத் தெரிவிக்கப்பட்டுள்ளதா ?

(ஈ) இந்த உடைப்புக்களால், தண்ணீர் இன்றி வாடிப் பாழாகிவிட்ட பயிருக்கு உரியவர்கட்கும், பாதிக்கப்பட்ட விவசாயிகட்கும், அரசாங்கம் வரி நீக்குவதற்கான உத்தேசமுண்டா ?

THE HON. SRI P. KAKKAN : (அ) உடைப்பை அடைக்க எட்டு நாட்கள் ஆயின. அந்த வட்டாரத்தில் அதிக மும்மரமாக விவசாயம் நடந்துகொண்டிருந்ததால் வேலையாட்கள் அகப்படவில்லை. என்றாலும் உடைப்பை அடைக்கும் வேலை அதி துரிதமாகச் செய்து முடிக்கப்பட்டது.

(ஆ) 26—7—58-ல் கிராண்டு அணைக்கட்டு கால்வாயில் ஆர்.டி.10102 என்னுமிடத்தில் ஒரு உடைப்பு ஏற்பட்டது.

(இ) இந்த விஷயத்தைப்பற்றிப் பரிசீலனை செய்யப்படும்.

(ஈ) இந்த விஷயத்தையும் பற்றிப் பரிசீலனை செய்யப்படும்.

SRI P. U. SHANMUGAM : ஆண்டுதோறும் இதுபோல் உடைப்பு ஏற்படுவதைத் தடுக்க சர்க்கார் ஏதேனும் திட்டம் தீட்டியிருக்கிறார்களா ?

THE HON. SRI P. KAKKAN : இப்பொழுது தகவல் என்னிடம் இல்லை. இருந்தாலும், அந்த இடத்தில் நன்றாக அணை கட்டவேண்டுமென்று சொல்லியிருக்கிறேன்.

SRI A. R. SUBBIAH MUDALIAR : உடைப்பை அடைத்து முழு சப்ளை கொடுக்கப்பட்டுவிட்டதா ?

THE HON. SRI P. KAKKAN : ஆம்.